சிவமயம்

திருநெல்வேலி வித்துவான்

அம்பலவாணன் கவிராஜரவர்கள் குமாரர்

# முத்துக்குமாரசுவாமிக் கவிராஜரவர்கள்

இயற்றிய

# திருப்புடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதியும்

வாதவூரடிகளுள்பட அறுபத்துநான்கு நாயன்மார்

சிவபதமடைந்த திருநக்ஷத்திர அந்தாதிக் கலித்துறையும்

திருநெல்வேலி

ஷ்ரீ முத்துக்குமாரசுவாமிக்கவிராஜரவர்கள் குமாரர்

## கவிராஜ நெல்லையப்ப பிள்ளையவர்கள்

இயற்றிய

## திருப்புடைமருதூர் இரட்டைமணிமாலையும்
## திருப்புடைமருதூர் மும்மணிக்கோவையும்

திருநெல்வேலி

கவிராஜ சுந்தரமூர்த்தியாபிள்ளையவர்கள் குமாரர்

கவிராஜ ஈசுரமூர்த்தியாபிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

மு. ரா. அருணாசலக்கவிராயரால்

மதுரை:

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

1914.

## சாற்றுக்கவிகள்.

### திருநெல்வேலி மஹாவித்துவான்
### சாலிவாடீசுர ஓதுவாமூர்த்தியவர்க ளியற்றிய செய்யுள்.

ஆசிரிய விருத்தம்.

உருவூர்ச்சித் தருள்பெயர்முன் றறிவரியோன்
புடைமருதி னாடுதோன்றிக்
கருவூர்ச்சித் தருக்காக மெய்சாய்ந்தோன்
றிருமுடிமேற் கருதுநாற்சொன்
மருவூர்ச்சித் தமர்பதிற்றுப் பத்தந்தா
திப்பனுவன் மாலைவேய்ந்தா
னொருவூர்ச்சித் தனைப்பணிமுத் துக்குமா
ரசுவாமி யுயர்பாவேந்தே.

---

### இந்நூலாசிரியருக்குக் கனிஷ்ட சகோதரர்.கவிராஜ
### சுந்தரமூர்த்தியாபிள்ளையவர்க ளியற்றிய செய்யுள்.

மூத்தந்தா திப்பரமர் புடைமருதூர் முக்கணர்மேன் முதிர்பதிற்றுப்
பத்தந்தா திப்ரபந்தஞ் சொற்பொருள்க ணயமுறவே பாடினன்முன்
னித்தந்தா திகம்பரவென் றடிபரவம் பலவாண நிபுணன் சேய்காய்த்
கொத்தந்தா திவர்நெல்லை முத்துக்கு மாரசுவா மிக்கோ மானே.

---

### இந்நூலாசிரியர் மாணக்கரு ளொருவராகிய
### வைகுந்தநாதன் கவிராஜ ரவர்கள் இயற்றிய செய்யுள்.

புலந்திகழ்ஞா னக்கொழுந்தாய்ப் புடைமருதூர்
வீற்றிருந்த புனிதர்மீது
நலந்திகழ்சொற் பொருள்விளங்கு பதிற்றுப்பத்
தந்தாதி நவின்றான்கங்கைக்
குலந்திகழும் பலவாணக் குரிசிலருள்
பாலனியற் கோமானெல்லைத்
தலந்திகழ்நா கரின்முத்துக் குமாரசுவா
மிப்புலமைத் தமிழ்வல்லோனே.

---

இந்நூலாசிரியர் குமாரர்

## அம்பலவாணன் கவிராஜ ரவர்க ளியற்றிய செய்யுள்.

வேய்வனநெல் லையிற்றலைமைப் புலமை யாச்செவ்
வியினடத்தும் வித்தகன்பூ வேவ தாக
வாய்வனங்க ளிற்கவின்மே வன்பன்முத்துக்
குமாரசுவா மிககவிவேந் தமுதி னண்டந்
தோய்வனவா குங்கொடிகள் சேரு மாடந்
துன்னுபுடார்ச் சுனப்பரமர் சோம னோடும்
பாய்வனமார் சடைநாதும் பூவி சன்மேற்
பதிற்றுப்பத் தந்தாதிப் பாவேய்ந் தானே.

---

ஷையார் கனிஷ்ட சகோதரர்

## கவிராஜ நெல்லையப்பபிள்ளை யவர்க ளியற்றிய செய்யுள்.

செந்தமிழ்க் கவிவாணர் புகழுமம் பலவாண
திரனுக் கினியபாலன்
திண்புயத் திற்குவளை மாலிகை யணிந்திடு
சிறப்புளா னெல்லைவாசன்
அந்தமிகு முத்துக்கு மாரசா மிக்கவி
ராசன்விண் ணகடுதோயும்
அலர்மருவு சோலைசூழ் புடைமருதி னூரினிடை
யனுதினமு மருளின்வாழுஞ்
சந்தனக் குங்குமச் சேறணியு முலையுடைய
தையல்கோ மதியோர்பங்கன்
றற்பரா னந்தன்மெய் சாய்ந்தசிற் பரனெழிற்
றுளிணையின் மீதிலன்பாய்
நந்தகோ பாலன்முன் னந்தரத் தோர்க்கமுதை
நல்குநன் னீர்மையென்ன
நாவலர்க் கமுதமாப் பதிற்றுப்பத் தந்தாதி
நனிர்தொடையல் வேய்ந்தனனரோ.

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# திருப்புடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

## விநாயகர் வணக்கம்.

பொன்பூத்த செழுமலர்ப்பைந் துணர்பூத்த பொதும்பரொரு புடையிற் பூத்த, தென்பூத்த புடைமருதூர்ப் பதிற்றுப்பத் தந்தாதித் தெரிய வெம்மான், மின்பூத்த திருமுடிமேல் வளையவருள் புரியுமிம்மே தினியோர் விண்ணோர், கொன்பூத்த படிறணோ தென்னையுமாண் மருதடிக்குஞ் சரத்தின் றாளே.

## நூல்.

மருவார் பொழிலார் வளமார் மருதூ
ராரவா பரணா வமலா வெனையாள்
பரனே யுயர்கோ மதிபங் கினனே
புரமூன் றழலப் பொடிசெய் தவனே. (௧)

தவமே புரியுந் தகையோ ரையுறு
தவமே*யுழிதந் தலைவே னையுமாள்
பவனே யுயர்†லே பனசுந் தரனே
சிவனே மருதூர் திகழ்கா வலனே. (௨)

காவா யெனவக் காவா யுறையுந்
தேவா திபனுந் தினமும் பணியு
மாவே றுடையா யடியே னையுமாள்
கோவே மருதூர் குடிகொண் டவனே. (௩)

---

* உழிதந்து - திரிந்து; இங்ஙனம் வருமிடந்தோறுங் கொள்க.

† லேபனசுந்தரர் - சுவாமிபெயர்.

கொண்டோ ரடிமைக் குறையோ குறியாக்
கண்டே கடியார் கடியார் பொழிலில்
வண்டே முரலும் வளமார் மருதூர்த்
தண்டே னிதழிச் சடையா யருளே. (௭)

சடையா ரரவா தழலார் நுதலா
விடையார் கொடியாய் விமலா கழுமுட்
படையாய் மருதூர்ப் பதியாய் பகவா
கடையே னையுமாள் கருணா கரனே. (௮)

* கரமா றிருவேள் கடியா ரடிகொண்
டிரமார் தருநல் லுதையுண் மகிழும்
பரமா வெனையாள் பவனே மருதூர்
திரமா வுறையுஞ் சிலையில் வலனே. (௯)

வலமார் மழுவா மதியா டரவஞ்
சலமா துறையுஞ் சடையா வெளியேன்
மலமா யையினுன் மருளா தருள்வாய்
நலமார் மருதூர் நகராள் பவனே. (௰)

ஆளா வெளிலோ வடியேன் மிகவு
மூளா வினையான் முறையோ பிறழா
மீளா நெறியும் வினவா தலையா
வாளா கெடுவேன் மருதூர் மணியே. (௧௧)

மணியே மருதூர் மருவும் மரவப்
பணியே யணியும் பகவா பரவத்
துணியே யினியிச் சுமையா ருடலப்
பிணியே யகலும் பெருவாழ் வருளே. (௧௨)

வாழ்வா ரிடைபோய் வறுமைக் குறையாற்
றுழா வுரையா தளரா தருள்வாய்
போழார் மதியம் புனைவாய் சுருதிக்
†காழா மருதூர் கருதும் பரனே. (௧௦)

* கரமாறிருவேள் - ஆறிருகரவேளென மாற்றிப் பொருள் கொள்க.
† காழ் - வயிரம்.

வேறு.

பரவிடுநின் மெய்யடியார் பாலணுகி யுயவறியா
திரவுபகல் கயவர்களோ டிணங்கிமிக வெய்த்தேற்குன்
விரைமலர்ச்சே வடிவழுத்தும் வேட்கையளித் தருள்புரிவாய்
புரமழல நகைசெய்திருப் புடைமருதம் பதியானே. (கக)

பதியென்றும் பசுவென்றும் பாசமென்று மூன்றவற்றின்
மதியொன்றி யுணர்ந்திடுவோர் மாண்பொருளை யடைவரெனத்
துதியொன்று மெய்யடியார் சொலக்கேட்டு மனமதறியும்
விதியின்றி யெய்த்தலைந்தேன் புடைமருதூர் வித்தகனே. (கஉ)

வித்துருமம் போலுமிதழ் வெண்டாளம் போலுநகை
புத்தமுதம் போலுமொழிப் பொன்னனையார் மீதினிதஞ்
சித்தமதை வைத்துழலுஞ் சிறியேனுய்ந் திடவருளாய்
மத்தமதி யணிசடையெம் மருதவளம் பதிக்கரசே. (கங)

அரசேயுன் றனைவணங்கு மன்பேது மிலனாகிப்
புரைசேரு மனத்தொடும்யான் புன்கணுத திப்படிர்து
கரைகாணா துழிதந்தேன் கருத்திரங்கி யெனையாள்வாய்
வரைசேர்குங் குமமுலைக்கோ மதிபுணரு மாண்பொருளே. (கச)

பொருளேமண் ணேமடவார் போகமே யெனமூன்றின்
மருளேகொண் டழித்திடும் மலத்தினுக்கி டாயுழிதந்
திருளேகொண் மனத்தோடு மிதுகாறு மெய்த்தேனுன்
னருளேதந் தெனையாள்வாய் புடைமருதூ ராண்டானே. (கரு)

ஆண்டாயென் சிறுமைதனை யறியாதுன் பெருமையினால்
வேண்டாது விடுத்தொழிந்தேன் வேணாவா விலனாகிச
சேண்டாவு மதின்மருதப் பதியாய்பைச் சினவரவம்
பூண்டாய்மற் றினியெனக்குப் புகலேது புகலாயே. (கசு)

புகலேது புகல்விரிப் புலாலுடம்பிற் பொருந்துமுயி
ரகல்போது வருங்கூற்றுக் கவனைவெல வேண்டுதிரேற்
சகமேழும் புகழ்மருதூர்த் தலைவர்*மெய்சார்ந் தவரைநித
மகமேகொண் டகமேக வனுதினமும் பணிவீரே. (கஎ)

* மெய்சார்ந்தவர் - சுவாமி பெயர்; இங்ஙனம் வருமிடந்தோறுங்கொள்க

வீறுபெறு மவுணர்புரம் வேனில்வேள் புரங்கடிதி
னீறுபட வடர்த்தருளு நின்மலா மும்மலநின்
றாறுபெரும் பவக்கடல்வீழ்ந் தழிதந்தேற் குனைவழுத்தும்
பேறுதனை யருண்மருதம் பெருமைவளம் பதிக்கிறைவே. (கஅ)

இறையேயுனு நினைவழுத்து மியல்பறியா ரென்செய்வார்
கறைசேருங் காளமெனக் காலனுர் வரும்போது
நறைசேர்செவ் விதழிபுனை நம்பாநம் பிடுமடியேன்
குறைதீர்த்தாள் புடைமருதூர் குடிகொள்ளுங் குருஉச்சுடரே. ()

சுடரேமெய் யடியார்க டுணையேபை யரவொடுவெம்
படரேடா ரிதழிபுனை யமலாதம் மகத்துணர்ந்தார்க்
கிடரேலாப் புடைமருதா ரெந்தாயெந் தாயெனவுந்
தொடரேனுன் றனையமனுர் தொடர்போதென் சொல்வேனே. (உ0)

## வேறு.

வேலைவென்று சேலைவென்று விசிகம்வென்ற விழியினுர்
மாலைவென்றி டாதுநாளு மாசை யொன்றி யலைவனே
சூலை *வென்று மன்றொரன்பர் தொண்டு கொண்டு தூயசொற்
பாலைவென்ற கோமதிப்பெண் பங்கில் வாழு மையனே. (உக)

ஐய னேயெ னத்தின மடுத்த டுத்தி றைஞ்சுவோர்
மெய்ய னேபு டார்ச்சுனத்து மேவி வாழு மேருவிற்
கைய னேயு னைத்தொழுங் கருத்தி லாக்க [illegible]
பொய்ய னேனை யுய்யு மாறு போற்றனுன் புகழதே. (உஉ)

தேவ ராச னேடுவைன தேவனுாரு மாலயன்
மூவ ராதி தேவரு முதற்றொழும்பு [illegible]
மாவ லாக வந்திறைஞ்சு மண்ணலே புடார்ச்சுன
மேவி வாழ்மெய் சாய்ந்தநாத வேண்டுவா ருளத்தனே. (உங)

உளத்தி னுர்வ மொடுவணங்கு முணர்விலா ருளத்துருக்
களத்தினுப் களத்தி னூடு காரிவைத்து வானுளோர்க்
களப்பி லாத துபாகற்றி யாள்புடார்ச்சு னவெனக்
கிளத்தி னுர்கள் புவி† சதக் கிருதுவென்ன வாழ்வரே. (உச)

* வென்று - நீக்கி (தாற்பரியம்.) † சதக்கிருது - இந்திரன்.

வரையை வில்ல தாகவேவு மாலதாக வேவியே
நிரைபொ ருந்து மரணமட்ட நின்மலா தினம்வசுந்
தரையை யொன்று பிறவிவேலை தனையகன்று தமியனோர்
கரையை மேவ நினதுதாட் கமலமீந்து காப்பையே. (உரு)

பைங்கண் வெள்ளை யேற்றனே பணிபவ ருளத்தினுட்
டங்கு கின்ற சோதியேமெய் சாய்ந்தநாத தமியனோர்
வங்க வேலை யுட்டுரும்பு மானவாயி னேனினி
யிங்கிவ் வாழ்வை யாற்றிலே னிணைச்சரண் ணருள்வையே. (உசு)

வைக லந்த மூவிலைய மாப்படைக் கரத்தனே
செய்க லந்த நீள்வளஞ் செறிந்திடும் புடார்ச்சுனத்
தைக லந்த மேனியெங்க ளம்மைகோ மதிப்பெனோர்
மெய்க லந்த வாகநாத மேலவாம் புரத்தனே. (உஎ)

*புரத்தை யுற்ற பேறுநீர் பொருந்தவேண்டி னான்முகன்
சிரத்தை யொன்று கொய்தவெங்கள் செல்வன்வான நாடனும்
வரத்தை யெய்த ‡நாவலாக வந்துறும் புடார்ச்சுனத்
தரத்த மேனி யாளனாரு மண்ணலைப் பணிம்மினே. (உஅ)

பணியை நோக்கி மானனார்தம் படிவநோக்கி மூரலின்
னணியை நோக்கி நின்சர ணகத்துநோக்கு றுதியான்
பிணியை நோக்கும் யாக்கையைப் பிடித்துநோக்கி யெய்த்தனன்
கணியை நோக்கு புடார்ச்சுனங் கண்டுநோக்கி †வாணனே. (உகூ)

வாணி நாவில் வைத்ததேவன் மாவைமார்பில் வைத்தவன்
றாணி லாவு நீண்முடி தனையினந் துருவியுங்
காணி லார்க ளெய்த்தனர் கடையனே னுனைத்தினம்
பேணி யேத்தி யுயநினைந்த பெற்றிநன்று நன்றரோ. (௩0)

## வேறு.

நன்று தீதெனும் பகுப்பினை யுணர்ந்திடு நலமிலேன் மலமாயை
துன்று மிவ்வுடலோம்பிடும் வாழ்க்கையேதொழிலெனக்கொள்கின்றே

* புரம் - சரீரம். ‡ நாவல் - நாவல் விருக்ஷம். † வாணன் - வாழ்கின்றவன்.

னென்று நின்றிரு வடியிணை யருகுற் விருப்பதன் பர்கணெஞ்சக்
குன்றெ னுங்கயிலாயத்து மருதினுங் குடிகொளும் பெருமானே. ()

மானை நேர்விழி மடந்தையர் மயக்கினின் மயங்கியே தனமீதிற்
றானை சோர்வது சிறிதெனி னும்பெரி தாமென வெணியெண்ணி
யேனை யொன்றினை மதித்திடா தூழிதரு மேழையேன் றனையாள்வா
யானை யீருரி போர்த்துநன் மருதடி யமர்ந்திடும் பெருவாழ்வே. ()

பெருகு மார்வமீக் கொண்டுநின் றிருவடி பேணல்செய் வழிபாடு
கருதும் வாழ்க்கையே வாழ்க்கையா மெண்ணிடுங் கருத்தையே யளித்தாள்வா
யருகு நங்கையாங் கோமதி தனைவைத்த வண்ணலே யறுகாருஞ்
செருகு செஞ்சடை வள்ளலே யன்பர்தஞ் சிந்தையி லிருப்போனே

இருப்பு நெஞ்சனுங் கொடியனைப் பவம்பல வெடுத்தெடுத் துழல்கின்ற
வுருப்ப வெம்பிணி யுடையனை யுனதுதா ளுபயமாஞ் சஞ்சீவிப்
பொருப்ப தீந்துகாத் தருள்புரி நெல்லையிற் றில்லையிற் பொதுமேவும்
விருப்ப தார்ந்திடும் பரமனே மருதடி மேவுமெய் சாய்ந்தோனே. ()

சாய்ந்த மேனியுங் கறைதரு கண்டமுந் தவளநீ றணிமார்பும்
பாய்ந்தி டும்புலி யதழுடை யழகுமப் பரிதிபோ லொளிர்சோமன்
காய்ந்தி டுங்கன லெனுமுக் கண்ணுமோர் கருணைபே வடிவாக
வாய்ந்த கோமதி பாகமு மாகியென் மனத்திடை வதிந்தானே. ()

வதிந்து மாதவங் கனலிடை நீரிடை மண்ணிடை நாடோறும்
பதிந்து செய்யினும் பல்கலை யாயினும் பயனிலை வெண்ணீறு
பொதிந்த மேனியான் புடார்ச்சுனத் தமர்ந்தருள் புண்ணியன் றிருப்பாத
முதிர்ந்த வன்பொடு பணிந்திடி லிம்மையே முன்னிய பெறலாமே. ()

பெற்றி டேன்பிறை முடிச்சடை யெம்பிரான் பேரரு ளினையன்றி
யுற்றி டேனவ னடியரல் லாரொடு முண்மையாய்ப் பிறர்நாமம்
பற்றி டேனவன் பாடலு மூவர்செய் பாடலு மேயன்றிக்
கற்றி டேன்மரு தடியுறை பிரானன்றிக் காண்க*வுங் கில்லேனே. ()

இளையி லாமெனவ ழிபினுந் தானொரு கேடிலான் பின்றோன்று
முளையி லானிள மையுமிலான் பழித்திடு மூப்பிலான் பணியாதா
ருளையி லான்மகிழனையிலா னொளிதனக் கொப்பிலான் றினங்கொண்மூ
† வளையி லான்படு பாலெனத் துயின் ‡ மருதூரிடை வாழ்வோனே.

* உங்கு - உவ்விடம். † வளையில் - சங்கினிடத்து. ‡ மருது - மருதமரம்.

வான மாகியொண் பருதியா யிரவினின் வயங்கிடு மதியாகிப்
பான றும்புன லாகிநற் சுடர்விடு பாவகன் புவியாகி
யேனை யூதைய தாயிய மானனு மெட்டுரு வாய்நின்ற
ஞான நாயகன் மருதடி யுறைதரு நம்பனைக் கண்டேனே. (௩௬)

கண்ட மீமொரு கறையுற நெடியனுங் கண்ணனே டுயர்தேவர்
கொண்ட வச்சமு நாணமு மனத்தினிற் குறித்துவந் திடுநஞ்சை
யுண்ட பேரரு ளெம்பிரான் புடார்ச்சுனத் துற்றுநா டொறுமேத்துந்
தொண்ட ருய்ந்திடக் கோமதி பாகமாய்த் துதைந்தினி திருந்தானே.

வேறு.

தானை யொன்றெனத் திகைத ரித்தவன்
கானை யொன்றிடுங் கடுக்கை வேணியன்
றேனை யொன்றுகாச் செறிபு டார்ச்சுனன்
மானை யொன்றுகோ மதியொர் பாகனே. (௪௧)

பாத தாமரைப் பண்பு காட்டியென்
மூது றும்வினை முழுது நீக்கினு
ேனுத மேவுநஞ் சுண்ட கண்டனும்
போதன் வாழ்வுறும் புடார்ச்சு னத்தனே. (௪௨)

நத்த னுன்முக னுநு நாடொணுப்
பித்தன் மெய்யடி பேணி னர்க்கருண்
முத்தன் வெண்ணகை மூரல் வாண்முகம்
வைத்த கோமதி மாதொர் பாகனே. (௪௩)

பாக னுவிவன் பாலொர் பேரரு
ளாக னுயகன் வைத்த தென்னெனத்
தாக மோடடி யார்கள் சாற்றிட
வாகன் மாமரு தூர னுண்டதே. (௪௪)

தேனை யொண்பழத் தின்சு வையினை
மானை யொண்கரம் வைத்த வள்ளலைக்
கோனை யாவுடைக் கொம்பொர் பாலுடை
யானை வாழ்த்திட வல்ல நீருமே. (௪௫)

தீர்க்கி லேன்வினை தீர்க்குந் தெய்வநூல்
பார்க்கி லேன்மயல் பற்று நெஞ்சினை
யீர்க்கி லேன்மரு தூரி னெந்தையைச்
சேர்க்கி லேன்மனந் தெளிவ தெங்ஙனே. (சசு)

எங்க ளுய்பக னெங்கு மாயவன்
கொங்கு லாமலர்க் கோதை கோமதி
பங்கு ளான்றனைப் பாடு வார்வினை
நுங்கு வானடி நோற்ற னன்மையே. (சஎ)

மையு றுங்கணி மங்கை பங்கினன்
கையு றும்மழு மானுங் காட்டிடு
மெய்யு றுந்தன்மெய்ப் சாய்ந்த வன்பதங்
கொய்யு நாண்மலர் கொண்டு தூமினே. (சஅ)

பின்னை நேருமிம் மெய்யை மெய்யென
வுன்னி யுன்னியே யொன்றுங் காண்கிலீர்
பொன்னை நேர்சடைப் புண்ணி யன்றடத்
தன்ன மார்மரு தூரை யண்மினே. (சகூ)

அண்ண லேயெனை யாளு நாதனே
பண்ண மர்மொழிப் பாவை கோமதி
நண்ண வோர்புற நல்கு நம்பனே
கண்ண யானுனைக் கருத்த ளிப்பையே. (ரு0)

வேறு.

பைய ராவணிச், செய்ய வேணியெம்
மைய னூர்மரு, துப்ப வுன்னுமே. (ருக)

உன்னு வீரெழில், மன்னு கோமதி
தன்னை *நாறும்பூப், பொன்னை நாளுமே. (ருஉ)

மேவ லார்புரம், பாவ கன்னுற
வேவு நாறும்பூத், தேவெ னீர்களே. (ருங)

கள்ள மேவுறு, முள்ள மேமெய்சாய்
வள்ள லார்புகழ், கொள்ளு நீயினே. (ருச)

---

* நாறும்பூநாதர் - சுவாமிபெயர். மேல் வருமிடந்தோறுங் கொள்க.

இன்னல் யாவையும், பின்ன மாகுறு
மன்னை யாவுடை, மன்னென் பார்கட்கே. (௫௫)

கேடு றுவகை, நாடு வீசெழில்
கூடு நாறும்பூ, வோடு சாருமே. (௫௬)

சாரு மன்பதை, யாரு மாமரு
தூரை யுன்னவே, சீரும் யாவுமே. (௫௭)

யானெ னும்மகம், போன தாமரு
தானை நற்றவத், தேனை யுன்னவே. (௫௮)

உண்ண யந்துநீ, ரண்ண ணுறும்பூப்
புண்ணரி யன்கழ, லெண்ண னன்றரோ. (௫௯)

அரியுங் காண்கிலாப், பெரியன் கோமதிக்
குரியன் சேவடி, தரிமின் சென்னியே. (௬0)

வேறு.

செந்நெ லார்வளச் சீர்நிதந், துன்னு மாமரு தூருறை
பின்ன லார்முடிப் பிஞ்ஞகன், றன்ன தாண்முடித் தாமமே. (௬௧

தாம மோடராச் சார்தரு, சோம னார்சடைச் சுத்தனார்
மாம ருதடி வாழுவார், கோம தியிடங் கொள்வரே. (௬௨)

கொள்ளை யென்பொலாக் கொடுமையை, யுள்ள வேமன முருகுமால்
வள்ள லாமரு தூரனை, நள்ளி ருண்ணட நம்பனை. (௬௩)

நம்ப னார்புடை மாமரு, தம்பொ னேரெழி லாவுடைக்
கொம்ப னாளொரு கூறனா, ரும்பர் நாதரொன் றோதுமே. (௬௪)

ஓத மேவுநஞ் சுண்டிடு, போத நாறும்பூப் புண்ணியன்
பாத பங்கயம் பரவுவார், நீத கன்றிடுஞ் செல்வரே. (௬௫)

செல்வ நல்லெழிற் றேகமே, யொல்லை நீங்கிடு மொன்றுகே
ணல்ல நெஞ்சமே நாறும்பூ, வெல்லை யில்லனை யேத்திடே. (௬௬)

இட்டு ணுமலே யீட்டிடு, மட்டி லாப்பொருள் வாய்ப்பினுற்
கிட்டி டாகதி நாறும்பூ, வட்ட மூர்த்திதா ளண்ணுமே. (௬௭)

அண்ண லாவுடை மாதொர்பா, னண்ணு நாறும்பூ நாதனை
யுண்ண யந்துநீர் போற்றிடி, லெண்ணம யாவையு மெய்துமே. ()

எய்து றுனம ணுறும்பூ, வையன் பேரரு ளார்ந்திடிற்
செய்ய நாண்மலர்ச் சேவடி, யுய்கு வான்றொழு துன்னுமே. (கூகூ)

உம்பர் நாதனை யாவுடைக், கொம்ப ளொடொரு கூறனை
நம்பு வார்வினை நாடிடிற், பம்பு மாரழற் பஞ்சமே. (எ0)

வேறு.

பஞ்சபா தகத்தொடு படரும் வல்வினை
நெஞ்சினி லுறுதுயர் நீங்குங் கோமதி
யஞ்சன விழிக்கடை யருளை நோக்கியே
தஞ்சமுற் றிடுபரன் றன்னைப் போற்றிலே. (எக)

இல்லென மகவென வெழில்கொள் கிள்ளையாஞ்
சொல்லெனுந் துணைவிய ரென்னச் சொற்றிடு
மல்லல்சே ரவாவினி லழுந்தி யாங்கதற்
கெல்லைகாண் கிலன்மரு தூரி னெந்தையே. (எஉ)

எந்தைநீ தனைப்பணிந தேத்து வார்க்கரு
டந்தைநீ தாயுநீ தமரு நீயெழிற்
பந்தைநேர் தனமுறு பாவை கோமதி
சிந்தைநீ புடைமரு தூரிற் செல்வனே. (எஙு)

செல்வன நாளெலாஞ் சிறிதுந் தேர்கிலாப்
புல்லறி வேனையும் பொருளென் றுண்டுநின்
னல்லரு ளுடிடு நலத்தை நல்கிடா
யல்லைநேர் கண்டகோ மதிப்பெ ணன்பனே. (எச)

அன்பினு லுருகிநின் னருளை நாடியே
யின்புறும் வகையளித் தெனையு மாண்டிடாய்
மன்பதை புகழ்புடார்ச் சுனத்தில் வாழ்ந்திடு
நன்பொனே யாவுடை மாதி னன்பனே. (எரு)

நண்ணிடா பழவினை நமன்ற னுண்மையுங்
கண்ணிடான் கருதுவீர் கயற்கட் கோமதிய

பெண்ணமு தினைநிதம் பிரிகி லாததோர்
பண்ணவ னுறும்பூப் பரமன் றன்னையே. (௭௬);

தன்னக நெகவிழித் தாரை சோர்தரப்
பன்னக முடிச்சடைப் பரமன் கோமதி
நன்னலந் துய்த்திடு நாதன் றன்னிரு
பொன்னடி தொழுமவர்ப் போற்ற வின்பமே. (௭௭).

இன்னியந் துவைத்தெழு மார்ப்பு மேழிசை
மன்னுறு நரம்பிசை வளனு மார்தரு
தன்னிகர் புடார்ச்சுனத் தலைவன் றாளிணை
சென்னியிற் கொள்பவர் செகத்தை யாள்வரே. (௭௮)

செல்வர்யா ரெனில்வளஞ் சேர்பு டார்ச்சுனத்
தல்லமர் கண்டர்மெய் சாய்ந்த வாதித
னல்லதாள் பரவிய நால்வர் பாடலாம்
பல்வளப் பாக்களும் பயின்று ளார்களே. (௭௯)




ஆர்நமக் குறுதுணை யம்மெல் லோதிநற்
சீருறு கோமதிச் செல்வி பங்கினிற்
காருறு மிடற்றுமெய் சாய்ந்த கண்ணுதற்
பேரரு ளாளனும் பித்த னன்றியே. (௮௦);

## வேறு.

அன்றாலின் கீழிருந் தேயற மாய நான்கு
நன்றாக நால்வர்க் குரைத்தேயிரு யோகி னண்ணும்
பின்றாள் சடையா னெழிலாவுடைப் பெண்ணி னோடு
நின்றான்புடை மாமரு தூரினை நேசி நெஞ்சே. (௮௧).

நெஞ்சே யுனக்கியா னுரைத்தே னிவை நித்தநித்த
மஞ்சே யெனச்சொற் றிடுமந்திர மோதி யந்திப்
பிஞ்சேய் மதிச்செஞ் சடைமாமுடிப் பிஞ்ஞ கன்†னீன்
மஞ்சேய் மிடற்றான் புடைமாமரு தூரை வாழ்த்தே. (௮௨)

†வாளாது நாளைக் கழித்தேயுட லோம்பி னேனுன்
றாளாதர வானுய வேண்டினன் சார்ந்த வேலால்

---

† நீல் - நீலநிறம். † வாளாது - இதில், து- தவிர்வழிவந்தது.

வேளா னவனை யெரித்தாய்நல மேவு தொண்டுக்
*காளா ரெனப்பே ரருள்கூர்மரு தூரு ளானே. (௮௩)

உள்ளும் புறம்பு மொருவாரென வொத்த வுள்ள
நள்ளும் புடைமா மருதூரினு நண்ணி வேதப்
புள்ளு மரியு மறியாமுடி போதை யென்று
மெள்ளுந் திருத்தா ளிணைபோற்றுமி னேழை யோரே. (௮௪)

ஏழைக் கிரங்கு மிறையாகிய வெந்தை யுண்கண்
மாழைக் குகந்த வெழிற்கோமதி வாச நானக்
†கூழைக் குகந்த மருதீசனைக் கொண்ட வுள்ளம்
வாழைப் பழத்தின் கனிமான நெகிழு மன்றே. (௮௫)

மானத்தை நீக்கிப் போருடேடுபொய் மாத ரார்தங்
கானத்தை மேவுங் கவினைக் கயற்கண்கள் செய்யு
மீனத்தை வேண்டி யிதுகாறுமெய்த் தேன்சு வர்க்கத்
தானத்தை யெட்டு மருதூரினிற் சார்ந்து ளானே. (௮௬)

ஆனேறி யென்றும் பறவைக்கர சாய புள்ளிற்
றானேறி யென்றுஞ் சலிலப்‡பயத் தைப்பி ரிக்கு
*மானேறி யென்றும் விளையாடிடும் †வாவி தோறு
மீனேறி யென்று மருதூரனை வேண்டு வீரே. (௮௭)

வேண்டும் மெளியேற் கொருமாவரம் விண்ணை மண்ணை
யாண்டின் புறினு நரகெய்தினு மன்பு மிக்கே
‡மாண்டங்கு நின்சீர் மலர்த்தாண்மற வாமை நல்காய்
சேண்டங்கு சோலை மருதூரினிற் செல்வ னீயே. (௮௮)

செல்வச் செருக்கா லுளமுட்கிடத் தேகி யென்று
சொல்லிப் பதநோக் குறுதூயரைத் தூட ணிக்கும்
புல்லர்த் தமையோர் பொருளென்று புகாது வேதத்
தெல்லைக் ககன்றான் மருதூரனை யேத்து வீரே. (௮௯)

---

* ஆள் - முதனிலைத் தொழிற் பெயர். † கூழை - கூந்தல். ‡ பயம் - பால். * மான் - (அன்னமாகிய) குதிரை. † வாவிதோறுமீனேறி யென்றும் விளையாடிடு மருதூரெனக் கூட்டுக. ‡ மாண் - மாட்சிமை.

ஏத்தாது நின்சீ ரிணைத்தாளினை யென்றும் வீணிற்
பார்த்தான் *மடிக்கே யிரைதேடிப் பரந்து முன்று
நீத்தேனடி யாரிடத் தன்பையு நீண்ட வாவி
பூத்தே யழகார் மருதூரினிற் புண்ணி யோனே. (கூ0)

## வேறு.

புண்ணியா போற்றி நீங்காப் பூரணா போற்றி தோன்று
நுண்ணியா போற்றி யாரு நுவலரும் பொருளே போற்றி
திண்ணியா போற்றி கோலத் திருமேனி சாய்ந்தாய் போற்றி
தண்ணியா போற்றி மேலைத் தற்பரா போற்றி போற்றி. (கூக)

தற்பரா போற்றி வேதத் தலைவனே போற்றி மேலாஞ்
சிற்பரா போற்றி வாசஞ் செறிதரு கடுக்கை தும்பை
பொற்பரா வணிந்த வேணிப் புனிதனே போற்றி மெய்சாய்
நற்பரா பரனே போற்றி நாதனே போற்றி போற்றி. (கூஉ)

தன்னிக ரில்லாச் செல்வந் தழைத்திடும் புடார்ச்சு னத்தின்
மன்னிய பொருளே போற்றி மாமறைக் கொழுந்தே போற்றி
யென்னையும் பொருளா கக்கொண் டீர்த்தெடுத் தாண்டாய் போற்றி
யன்னையு மானாய் போற்றி யப்பனே போற்றி போற்றி. (கூஙு)

போதினை வீண தாகப் போக்கினேன் போற்றி வாசத்
தாதினை யுகுக்குங் கொன்றைச் சடைமுடித் தலைவ போற்றி
சூதினை நிகர்க்குங் கொங்கைத் தோகைகோ மதித்தா யென்னு
மாதினை யொருபா லாக வைத்திடும் வள்ளல் போற்றி. (கூச)

வள்ளன்மை யில்லான் றன்னை வள்ளலே யென்று வீணி
லெள்ளன்மை யெண்ணா தேத்து மேழையேன் போற்றி போற்றி
யுள்ளன்பு பூண்டார் நெஞ்சத் துறைதரு மொருவ போற்றி
வெள்ளஞ்சேர் சடையாய் போற்றி மேனிசாய்ந் தவனே போற்றி. ()

தவநனி புரிந்தோ ரோகை தழைத்திடச் செய்தாய் போற்றி
யவனியிற் புகுந்து நாயேற் கருள்செயும் பெருமை போற்றி
சிவனெனப் புடார்ச்சு னத்திற் றிருமேனி சாய்ந்தாய் போற்றி
கவனமால் விடையாய் போற்றி கருதரும் பொருளே போற்றி. ()

* மடி - வயிறு.

அரும்பெரும் பாத கங்க ளனைத்தையுந் தீர்த்தாய் போற்றி
பெரும்பய னுக யாரும் பேசிட நின்றாய் போற்றி
கரும்பமர் மொழிக்கட் கொங்கைக் கன்னிகோ மதித்தாய் நாளும்
விரும்பிய பரனே போற்றி மேலவாம் பொருளே போற்றி. (கூஎ)

ஆம்பல சமயந் தோறு மமைந்தினி திருந்தாய் போற்றி
பாம்பலங் கார *மோலிப் பண்ணவா போற்றி வாசத்
தேம்படு சோலை சூழ்ந்த திருப்புடார்ச் சுனத்தாய் போற்றி
வாம்பரி நரியாக் கொண்ட வரதனே போற்றி போற்றி. (கூஅ)

வரதமோ டபயந் தோற்று மான்மழுத் தரித்த செய்ய
கரதல முடையாய் போற்றி கருதுவார் மனத் †தள் ளூறு
மிரதம தானாய் போற்றி யெழிறரு புடார்ச்சு னத்திற்
குரவனாய் நின்ற வெங்கள் கோமளக் கொழுந்தே போற்றி. (கூகூ)

கொழுந்தழைக் கடுக்கை வேணிக் குழகனே போற்றி பாவத்
தழுந்துறு தெனை யாளு மமலனே போற்றி வேதச்
செழுந்தவி சுறைந்த கோலத் திருமேனி சாய்ந்தாய் போற்றி
தொழுந்தகை யிதயத் தென்றுந் துதைதரு மருவே போற்றி. (க00)

முற்றிற்று.

திருமேனிசாய்ந்த நாதர் திருவடிவாழ்க.

---

* மோலி - சடை. † அள்ளூறும் - மிகவூறும்.

அறுபத்துமூன்று நாயன்மார்களும் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுஞ் சிவபதமடைந்த மாதமும் நக்ஷத்திரமும் விளக்கும்

## அந்தாதிக் கலித்துறை.

மகர மதியின் மகசிரங் கண்ணப்பர் வான்பகனுட்
பகருநதண் டீச ரரிவாட்ட ரம்பிக்கை பங்கர்தந்நா
ணிகரில் விசாகத்தி னின்னீல கண்டரப் பூதிகுன்று
முகளுங் கலிக்கம்பர் நாவாய் சிவபதத் தோன்றினரே. (க)

ஒன்றிடு மாசியத் தம்மெறி பத்த ருடைகுள்நா
ணன்றறி காரி யெனுநாய ஞர்நனை யேறுயர்த்த
கொன்றைச் சடையருக் கன்பர்செங் கட்சோழர் குன்றெனுநாட்
சென்றனர் மேலாம் பரகதிச் செல்வஞ் செழிப்புறவே. (உ)

செழிப்புறு பாற்குனி ரோகிணி நேசரச் செங்கையினிற்
பழிப்பில் புகழ்சேர் கணநாதர் பூசம் பலமுறையு
மொழிப்பின் முனையடு வார்காரைக் காலம்மை யொண்விளக்கா
ழிழிப்பில் சதயநற் றண்டியச் சித்தியி லெய்தினரே. (ந)

சித்திரை மாதம் பரணி சிறுத்தொண்டர் சேர்சகட்டின்
மைத்துறு கண்மங்கை யர்க்கர சித்தாய் மறைமுதனுட்
சுத்த முறும்விறன் மிண்டரச் சித்திரை தொல்லிசைஞா
னித்தகை யாரிவர் பாதங்க ளைத்தொழு தெண்ணுவமே. (ச)

எண்ணிடுஞ் சோதி திருக்குறிப் புத்தொண்ட ரென்பவரே
மண்ணிடை வெய்ய வமணர்கள் செய்திடும் வாதையெலாங்
கண்ணிட லின்றிச் சிவபெரு மான்கழல் கண்ணிப்பர
நண்ணினர் போர்திரு நாவுக் கரசெனு நற்றவரே. (ரு)

நல்லவை காசி பரணி கழற்சிங்கர் நாட்டிடுந்தை
யொல்லு நமிநந்தி யென்னு மடிக ளுயர்கவையிற்
சொல்லுஞ்சோ மாசிமா றன்னெனுந் தோன்றலித் தொல்புவியை
வெல்லு மமணரை வென்ஞான சம்பந்தர் மேவினரே. (சா)

மேலாகு மூலத் தினத்தின் முருகர்மெய்ந நீலநக்கர்
பாலார் திருநீல கண்டயாழ்ப பாணரும் பாங்கிருந்து
நாலார் மறைப்படி மங்கல நாண்பெறற நங்கையருஞ்
சேலாரு மைக்க ணுமைகோ னொடுமொன்றிச் சேர்ந்தனரே. (எ)

சேரானி மாமக மாணிக்க வாசக தேசிகர்மற்
றேராரும் பூரத் தமர்நீதி யென்றுல கேத்தநின்றோர்
சீரா ரிரேவதி நாட்கலிக் காமர் சிறப்பிறையோ
டாரா றணியுஞ் சடையா ரடிநிழ லாழ்ந்தனரே. (அ)

தனியாடி மாதநற் கார்த்திகை மூர்த்தி சதாசிவனு
ளினிதாருங் கூற்றுவ ராமெரி நாட்புகழ்ச் சோழரெங்குந்
தொனியாருஞ் சித்திரை தூய பெருமிழ லைக்குறும்பர்
கனியாருஞ சோதியிற் சுந்தர மூர்த்திக் கயந்தலையே. (கூ)

கயந்தலை மீதிற் கயிலையை நோக்கிக் கடுகிடும்போ
தயந்தனி லேறித் தொடர்கழ றிற்றறி வார்க்குமஃதே
சயந்தரு கேட்டை கலியரத் தாழ்வி றினமெவரு
நயந்துறக் கோட்புலி நாயனார் மேற்கதி நண்ணினரே. (கO)

ரண்ணிடு மாவணிப் பூசஞ் செருத்துணை நல்லகவ்வை
யெண்ணு மதிபத்த ரேரிளை யான்குடி மாறர்மகங்
கண்ணு மனுடங் குலச்சிறை யாயில் புகழ்த்துணையார்
மண்ணும் புகழுங் கலயரை மூலத்து வாழ்த்துவரே. (கக)

வருகன்னி யச்சு வினிநா ளுருத்ர பசுபதியாந்
திரமா முரோகிணி நாட்டிரு நாளைப்போ வார்கணிதர்க்
குரவுத் திராடத்தி லேனாதி நாத ருயர்சதயம்
பரமார்ந் தனர்நர சிங்க முனையரென் பண்பினரே. (கஉ)

பண்பாரு மைப்பசி யச்சு வினிதிரு மூலர்பலன்
மண்பாற் பரணி யினினின்ற சீர்நெடு மாறரங்கி
நண்பா மிடங்கழி சத்திதை பூசலை நாட்பனையா
மொண்பா ரிலையடி கண்மூல நாளிலென் றோதுவரே. (கங)

ஓதுறு கார்த்திகை யாரல் கணம்புல்ல ருத்திரமே
சாதுறு மெய்ப்பொரு ளத்தமா ளுயர் தணிவின்மூலம்
வாதுறு மூர்க்கர்பூ ராடஞ் சிறப்புலி மற்றிவர்தா
மீதுறு கின்ற சிவபுரத் தண்மி விளங்கினரே. (கச)

விளங்குநன் மார்கழி யிற்றிரு வாதிரை மெய்ச்சடையார்
வளங்கொளுஞ் சோதிநன் மானக்கஞ் சாறர் மகிழ்சலநாட்
டுளங்கவில் சாக்கிய ருத்திரந் தூய வியற் பகையார்
களங்கமி லுவாயில் வாயிலா ரென்று கருதுமினே. (கரு)

மின்னார் சடைமுடி யாரடி யார்செய்யு மெய்த்தொழிலை
யுன்னு வழிபடு வோர்கள் வருதுய ரென்றுமின்றிப்
பன்னுளிப் பாரினி லின்பமுந் துய்த்துப் பரையொடுறு
மென்னு யகன்மகி ழுஞ்சிவ லோகத்தி லெய்துவரே. (கசு)

முற்றிற்று.

| பாட்டின் எண் | அரும்பதப்பொருள் | பாட்டின் எண் | அரும்பதப்பொருள் |
|---|---|---|---|
| க | மகரமதி—தைமாதம் | | கௌவை,கவை—ஆயிலியம் |
| | மகசிரம்—மிருகசீரிடம் | எ | மூலம்—மூலம் |
| | பகனுள்—உத்திரம் [ரை | அ | மாமகம்—மகம் |
| | அம்பிகைபாகனுள்-திருவாதி | கூ | சதாசிவனுள்—திருவாதிரை |
| | குன்று—சதயம் | | எரிநாள்—கார்த்திகை |
| | நாவாய்—இரேவதி | | கயந்தலை—யானைக்கன்று |
| உ | அத்தம்—அஸ்தம் | க0 | அயம்—குதிரை |
| | உடைகுளம்—பூராடம் | கக | கவ்வை,கவை—ஆயிலியம் |
| ங | பாற்குணி-பங்குனிமாதம் | கஉ | கன்னி—புரட்டாசி மாதம் |
| | செங்கை—திருவாதிரை | | அச்சுவினி—அசுபதி |
| | விளக்கு—சுவாதி | | கணிநர்—சோதிடர் |
| ச | சகடு—உரோகிணி | கங | அங்கி—கார்த்திகை |
| | மறைமுதனுள்.திருவாதிரை | | பனை—அனுஷம் |
| ரு | சோதி—சுவாதி | கச | ஆரல்—கார்த்திகை |
| | போர்—சதயம் | கரு | சலநாள்—பூராடம் |
| சு | தை—பூசம் | கசு | பரை—பார்வதி |

## நாயன்மார் முத்தியடைந்த திருநக்ஷத்திரம்.

உத்தராயணம்

தை மாதம்

மிருகசீரிடம்—கண்ணப்பர்
திருவாதிரை—அரிவாட்டாயர்
உத்திரம்—சண்டேசர்
விசாகம்—நீலகண்டர்
சதயம்—அப்பூதியார்
இரேவதி—கலிக்கம்பர்

ஆக சு

மாசி மாதம்

அத்தம்—எறிபத்தர்
பூராடம்—காரியார்
சதயம்—கோச் செங்கட்சோழர்

ஆக ங.

பங்குனி மாதம்

உரோகிணி—நேசர்
திருவாதிரை—கணநாதர்
பூசம்—முனையடுவார்
சுவாதி—காரைக்காலம்மையார்
சதயம்—தண்டியடிகள்

ஆக ரு.

சித்திரை மாதம்

பரணி—சிறுத்தொண்டர்
உரோகிணி—மங்கையர்க்கரசியார்
திருவாதிரை—விறன்மிண்டர்
சித்திரை—இசைஞானியார்
சுவாதி-திருக்குறிப்புத்தொண்டர்
சதயம்—திருநாவுக்கரசர்

ஆக சு.

வைகாசி மாதம்
பரணி—கழற்சிங்கர்
பூசம—நமிநந்தியடிகள்
ஆயிலியம்—சோமாசிமாறர்
மூலம்—திருஞானசம்பந்தர்
ஷை—முருக நாயனர்
ஷை—திருநீலநக்கர்
ஷை—திருநீலகண்ட யாழ்ப்பாணர்
ஆ எ.

ஆனி மாதம்
மகம்—மாணிக்கவாசகர்
பூரம்—அமர்நீதி நாயனர்
இரேவதி—ஏயர்கோன்கலிக்காமர்
ஆ ௩.
ஆ உத்தராயணத்தில் (௩௦)

தெக்ஷிணாயநம்
ஆடிமாதம்
கார்த்திகை—மூர்த்தியார்
ஷை—புகழ்ச்சோழர்
திருவாதிரை—கூற்றுவர்
சித்திரை-பெருமிழலைக்குறும்பர்
சுவாதி—சுந்தரமூர்த்திசுவாமிகள்
ஷை—கழறிற்றறிவார்
கேட்டை—கலியர்
ஷை—கோட்புலியார்
ஆ அ.
ஆவணிமாதம்
பூசம்—செருத்துணையார்
ஆயிலியம்—அதிபத்தர்
ஷை—புகழ்த்துணையார்
மகம்—இளையான்குடிமாறர்
அனுடம்—குலச்சிறையார்
மூலம்—குங்கிலியக்கலயர்
ஆ சு.

புரட்டாதி மாதம்
அசுவினி—உருத்திரபசுபதியார்
உரோகிணி—திருநாளைப்போவார்
உத்திராடம்—ஏனதி நாதர்
சதயம்—நரசிங்கமுனையரையர்
ஆ ௪.

ஐப்பசி மாதம்
அச்சுவினி—திருமூலர்
பரணி—நின்றசீர் நெடுமாறர்
கார்த்திகை—இடங்கழியார்
பூசம்—சத்தியார்
அனுசம்—பூசலார்
மூலம்—ஐயடிகள் காடவர்கோன்
ஆ சு.

கார்த்திகை மாதம்
கார்த்திகை—கணம்புல்லர்
உத்திரம்—மெய்ப்பொருளார்
அத்தம்—ஆனயர்
மூலம்—மூர்க்கர்
பூராடம்—சிறப்புலியார்
ஆ ரு.

மார்கழி மாதம்
திருவாதிரை—சடையர்
உத்திரம்—இயற்பகையார்
சுவாதி—மானக்கஞ்சாறர்
பூராடம்—சாக்கியர்
இரேவதி—வாயிலார்
ஆ ரு.

ஆ தெக்ஷிணாயநம். (௩௪)
ஆ அயனம் 2 க்கு
நாயன்மார் (௬௪)
முற்றிற்று.

சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.

மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான்

## மு.ரா. அருணாசலக்கவிராயர் பாடியவை.

---

### வெண்பா.

கற்றதனா லாயபயன் கண்டா னிவனென்ன
உற்றவலக் கண்ணி லொளிர்சடையிற்—பெற்றவான்
* எல்லையப்பன் மாமலர்த்தா ளேத்தி யிறைஞ்சுநெல்லை
நெல்லையப்ப நாவலவா நீ. (1)

பூமலரா லெற்றைக்கும் பூசித்தல் போலவே
பாமலரா லும்பூசை பண்ணுகற்கோ—ஆ†மலர்பாய்
பூம்பழன மேய ‡ புடார்ச்சுனபு ரத்திறைவற்
காம்பழமை யாரன்பி னால். (2)

இரட்டைமணி மாலைவிண்ணணி லேயு மமுதத்
திரட்டைமணில் வந்தா லுஞ்சேணில்—விரட்டுநவை
கொண்டமும்ம ணிக்கோவை கூரறிவிற் கூறலுற்றாய்
கண்டவரெல் லாம்வியப்பக் காண். (3)

---

* எல்லை-சூரியன். † அலர் - நீர். ‡ புடார்ச்சுனபுரம் - திருப்புடைமருதூர்.



உ

சிவமயம்.

# திருப்புடைமருதூர்
# இரட்டைமணிமாலை.

காப்பு

வெண்பா.

அருட்டிரட்டு டார்ச்சுனத்தெந் தைமையர்மெய்சாய்ந் தாருந்
திரட்டைமணி மாலை யியம்பத்—தெருட்டியுளப்
போதகத்தி னின்று புரக்கு மருதடியிற்
போதகத்தின் றாட்கமலப் பூ.

நூல்:

வெண்பா.

பொன்மங்கை நீங்காப் புடைமருதூர் போற்றிடநற்
றன்மங்கைக் கொள்ளத் தரும்வரமே—வன்மங்கைச்
செய்யதனுக் கோமதிப்பெண் சேரும் புடைமருதூ
ரையரன்பர் வாழ்த்து மடி. (க)

கட்டளைக்கலித்துறை.

அடியார் குழுவினுட் சேர்ந்துன் னடிமலர்க் கன்புசெய்யும்
படியா தரித்தருள் பங்கய வன்னப் பறவைபதாய்
முடிதேட நின்ற முதல்வா கருணை முழுப்பொருளே
கடியார் பொழிலின் புடைமரு தூருறை கண்ணுதலே. (உ).

வெண்பா.

கண்ணுநீர் மல்கா கருத்துங் கரைந்துருகா
பண்ணுடன்வாய் நின்புகழைப் பாடாது—நண்ணும்
புகலிலைநீ யன்றிப் புரவாயென் செய்வேன்.
பகர்வாய் புடைமருதப் பா. (௩).

கட்டளைக்கலித்துறை.

பாதார விந்தமிப் பாவிக் கருளப் படாதுகொலோ
கோதார விந்த வினைசெய் துயர்கெடக் கூட்டியருள்
தாதார விந்தவிர் தாழ்சடை வானவ சாருமன்பர்க்
காதார விந்த முலைபாக வுன்ற னடைக்கலமே. (௫)

வெண்பா.

அடையலார் மூவெயிலு மட்ட பெருமை
புடைமருதூ ரீச புவியிற்—கடையேனைச்
சூழ்மும் மலவெயிலுஞ் சுட்டிடுறு யேன்பவத்தி
லாழ்கில னீயின் றருள். (௬)

கட்டளைக்கலித்துறை.

அருளேது மின்றித் தளர்வேனை வெவ்வினை யாற்றொடரு
மருளே யகற்றிப் பதாம்புய மென்னகம் வைத்தருள்வாய்
தெருளே வரைமுலைத் தேவியொர் பாக செழுமறையின்
பொருளே துரிசில் புடைமரு தூர்வளர் பூரணனே. (௭)

வெண்பா.

பூமா தவனுமலர்ப் புத்தேளும் போற்றிதழித்
தாமா புடைமருதூர்த் தாணுவே—காமாதி
யால்வருந்துன் போட்டி யருள்பெறும்வா றீசர்முத
னூல்வருந்தொண் டாற்றுமத நல்கு. (௮)

கட்டளைக்கலித்துறை.

நற்றவர் வானவர்க் காகப் புரமுன் னகையழலாற்
செற்றவ நீயென் னிருவினைப் பாசச் செருக்கறுப்பாய்
கற்றவர் போற்றிடு மாமணி யேயருட் கற்பகமே
பெற்ற முயர்த்த மணிக்கொடி யாயருட் பிஞ்ஞகனே. (௯)

வெண்பா.

பிஞ்சு மதிச்சடிலப் பெம்மானைப் பேணியலை
நஞ்சு மதிச்சருந்து நாயகனை—நெஞ்சுளென்றும்
வைத்தேத்து வார்க்கலது வாரா மலர்க்கணையெய்
தித்தகனை வெல்லுந் திறம். (௧௦)

கட்டளைக்கலித்துறை.

தித்திக்கு மென்மொழிக் கோமதி பாகன் றிருவடியை
நத்திக் குளிர்புன லாலபி டேகித்து நாடொறுநற்
புத்திக் குறுமலர் கைக்கொடு பூசித்துப் போற்றுநரை
முத்திக் குரிய ரிவரென் றுலகர் மொழிகுவரே. (கO).

வெண்பா.

மொழியமுத மென்று முகங்கமல மென்றும்
விழிகயல்க ளென்றும் வியந்து—மிழிவாய
மாதரைவாழ்த் தாது மருதீசா வாழ்கவென்றே
வாதரவு தந்தென்னை யாள். (கக)

கட்டளைக்கலித்துறை.

ஆரானை மாமறை யார்ந்தானை வஞ்ச ரகத்திலென்றும்
வாராானை யன்பர்முன் வந்தானைச் செவ்வி மருவுகொன்றைத்
தாரானைக் கந்தனைத் தந்தானைப்* பூதவத் தாருசெறி
யூரானை யேற்றினை யூர்ந்தானைப் போற்றுதி யூழ்கெடற்கே. (கஉ).

வெண்பா.

ஊழ்வினையைப் போக்கு முறுவருறும் பேரின்ப
வாழ்வினையே நல்கி மகிழ்விக்குந்—தாழ்வினைசெய்
நெஞ்சமே போற்றுதிநீ நீள்வளஞ்சேர் மாமருதூர்
நஞ்சுகந்தான் பாதமலர் னம். (கங).

கட்டளைக்கலித்துறை.

நந்தா மணிவிளக் கன்னானைக் கோமதி நாயகனை
†யிந்தா மணிச்சடை மாமரு தூருறை யீசனைமுன்
‡சுந்தா மணிற்பா வைவாயிற் சென்றபொற் றாளனையெண்
சிந்தா மணியைத் தொழுநெஞ்ச மேவினை சிந்திடற்கே. (கச)

வெண்பா.

சிந்தித் திருக்கவருள் செய்மருதூர் சேவிக்கப்
புந்தித் திருக்கனைத்தும் போக்குமே—வந்திக்கக்

* பூதவத்தாரு - மருதமரம். † இந்து ஆம் - சந்திரன், கங்கை. ‡ சுந்தா - தூதாக.

கூற்றுமஞ்சும் பிஞ்சுமதிக் கோடீரத் தார்மறைகள்
சாற்றுமஞ்சு நூபுரபா தம். (கரு)

கட்டளைக்கலித்துறை.

தந்தா வளமுரித் தாய்மரு தூர்வளர் சங்கரநின்
செந்தா மரைப்பதம் போற்றுகி லேனுனைச் சிந்திக்கிலேன்
பந்தா முலைச்சியர் மோகவெம் பவ்வம் படிந்துழல்வேன்
இந்தா குலந்தவிர்த் தாளடி யேன்முத்தி சேருகைக்கே. (கசு)

வெண்பா.

*சேட்டருக்கன் பான்மதியஞ் செந்தபனனு மூன்று
நாட்டருக்கன் பாற்றுகிலாய் நன்மருதூர்ப்—பாட்டருமை
மன்னவன்பி ளேறுகிலாய் வஞ்சநமன் வந்திடும்போ
தென்னசெய்வாய் நெஞ்சே யினி. (கஎ)

கட்டளைக்கலித்துறை.

இனியா வதுமரு தூருறை யீசனை யேயுமிடந்
தனியா தமர்தரு கோமதித் தாயினைச் சந்ததமும்
பனியார் மலர்கொடு பூசித்துப் போற்றிலென் பாழ்மனமே
துனியாமுன் னீசெய் வினைபோய் வளம்பல தொக்குறுமே. (கஅ)

வெண்பா.

வளங்கதுவுந் தென்மருதூர் வள்ளலுன் றாளென்
னுளங்கதுவச் செய்யிலெனக் குற்ற—விளந்தளிர்மெய்
மாதர்முதன் மூன்றால் வருந்துயர மாயுமின்றேற்
காதலுற்றுச் சேர்வேன் கடை. (ககூ)

கட்டளைக்கலித்துறை.

கடையனை யாளெனப் போற்றுரை யென்றுங் கனற்றுமழுப்
படையனை வெல்வினை பாறச்செய் நேத்திர பாலனைநன்
னடையனை கோமதி நாயக னைத்தொண்டர் நாடுதிருப்
புடைமரு தூரனைப் போற்றிடிற் சேர்தரும் பொன்மங்கையே. (உ0)

முற்றிற்று.

---

* சேட்டருக்கன் - அழகிய சூரன்; சேடு : அழகு.



உ

சிவமயம்.

# திருப்புடைமருதூர்
# மும்மணிக்கோவை.

—≈≈—

### காப்பு விநாயகர் துதி.

வெண்பா.

நாறும்பூ நாதர்மே னற்றமிழி னன்பாற்
கூறும்பூ மும்மணிக் கோவைதனை—யூறுமன்பின்
வெஞ்சரத்தின் றுரை விமலை யருண்மருதூர்க்
குஞ்சரத்தின் றுளிணைகாக் கும். (௧)

### சுப்பிரமணியர் துதி.

விம்முசெந் தனக்கோ மதியொரு பாகன் மெய்வலை விமலனுக்கன்பா
மும்மணிக் கோவை செந்தமி ழதனால் மொழிதர முன்றிணைப்புணர்த்துத்
தம்முனை முழுமைத் தந்தியா வாச்செய் சாமிவன் றகுவர்தங் குலத்தைத்
தெம்முனை முறுக்கித் திகழ்வடி வேற்கைச் சேய்பதஞ் சிந்தைசேர்த் துய்வாம்.

## நூல்.

ஆசிரியப்பா.

திருமகண் மருமத்* திருவிப் பயோததி
நடுவினிற் றிகழ்மணிச் சுடிகை யாரவணை
யறிதுயில் கொளுந்துழாய் நறியமா லிகைபுனை
தைம்படை பொறுத்தருள் பைம்புயல் வண்ணத்
திருவிக் கிரமனும் மருவன சாசனத்
திருந்துல கனைத்தையுந் தரும்பிதா மகனுங்
கற்பக நறுநிழல் பொற்பவாழ்ந் தரசுசெய்
கொண்டலின் மிசைவரு மண்டர்தங் கோவுந்
தேவரு முனிவரும் யாவரும் பணிகொளச்
செந்நெல் கழையெனக் கன்னல் கமுகெனக்
காட்டிடு வளமிகு நாட்டிநற் பழனமும்

---

* இருவி - இருத்தி.

விண்டொட வுயர்தரு தண்டலை களுஞ்செறி
திருப்புடை மருதூர்ச் சினகரத் தென்றும்
நீடொளிச் செம்மணிப் பீடிகை மீமிசை
வாமத் தமர்தரு கோமதி யனையொடு
வீற்றிருந் தருளும் விமலவா ருயிர்தொறு
மெள்ளினு ளெண்ணெ யெனத்திகழ் திகம்பர
பாயிருள் சீக்கும் பனிமதிச் செஞ்சடை
நாயக தயாபர நாறும்பூ நாத
வெத்தனை சென்மம்பா ணெடுப்பினு முனையென்
சித்தம்வைத் தேத்துந் திறமுநல் லடியார்
பத்தியு முனையே பாடுநற் பண்புந்
தரவுள மிரங்கிநிற் ருழ்வுறுந் தமியனேன்
சிரமிசைச் சூட்டுநின் றிருவடிப் பூவே. (௧)

வெண்பா.

பூமாது நாமாதும் போற்றும் புடைமருதூர்
வாமா னனையம்மை மங்கைபங்க—காமாதி
நாசமுறச் செய்தருளு நாறும்பூ நாதவென்பாற்
பாசமுற நீகடைக்கண் பார். (௨)

கட்டளைக்கலித்துறை.

பாராசை மாத ரெனு*மே டணையிற் பவித்துடற்றும்
பேராசை மாலை யகற்றிமெய்ஞ் ஞானத்தின் பேறருள்வாய்
†சேராசை மாவுடைப் பெம்மான் மதனன் செயிர்த்துமுன்செய்
போராசை மாய்த்த புடைமரு தூர்வளர் புண்ணியனே. (௩)

ஆசிரியப்பா.

புரிமுறுக் கவிழ்த்து வரிச்சிறை யறுகால்
புதுமது வருந்த வுதவுசெங் கமலப்
பூமிசை வதிதரு மாமறைச் செல்வனும்
வாமன வடிவாய் நாமமை வேற்கர

* ஏடணை - இச்சை; ஈடணை யென்பதன் மரூஉ.
சேராசை மாவுடை - பொருந்திய திசையாகிய பெரிய வஸ்திரம்

மாவலி வேந்துபால் மூவடி மண்கேட்
டோரடி யான்முனம் பார்முழு தளந்த
கள்ளப் பிரானும் வெள்ளன மேனமாய்
விண்ணகம் பறந்து மண்ணக மிடந்துந்
*துருவிட நின்ற பெருமவேழ் பரித்தேர்ச்
செங்கதி ரிரவி தங்குபு விடாய்கன்
றேகுதற் கமைந்த†விண் போகுயர் பொழில்செறி
மலயமால் வரைவளர் கலயமா முனிதனக்
குதவிய யருந்தமுன் னுதவிய வருணற்
கேன்ற கைம்மா றியற்றுதல் கடுப்ப
விடுப்பவம் மலய மேனின் றெழுந்து
மலைபடு சந்தொடு மாமணிக் குவையுங்
கைவரை மருப்பொடு மைவனக் ‡குவாலும்
விரிதலை யரம்பையின் மென்கனிக் குவையுங்
*கையரிக் கொடுபோர் களிப்புற வேகியவ்
வருணனுங் காந்தனை மனமகிழ்ந் தணையும்
பொருநைத் தென்றுறை புறத்தினி தொளிரும்
பலவளங் கதுவும் பழம்பதி யாய
திருப்புடை மருதூர் விருப்புட னமர்ந்த
கோமதி யம்மையோர் வாம பாகத்த
சங்கர நின்பத பங்கயம் பணிந்து
வேண்டுவ தொன்றுண் டீண்டுரை செய்குவ
லென்புதோல் பொதிந்த புன்புலால் யாக்கை
தளர்ந்தறி வழிந்தங் குளந்தடு மாறி
யாவிபோ மமையத் தோவில்பக ரேர்ந்து
கூற்றுவ னென்முன் றோற்றுவ தன்முன்
னஞ்சேய் களத்தநீ யஞ்சே லெனச்சொலி
முமலம தகற்றி யமலவீ டருளே. (சு)

* துருவிட - தேட, † விணபோகு - ஆகாயத்திற் செல்கின்ற, ‡ குவால் - குவியல். * கையரிக்கொடு - வாரிக்கொண்டு.

வெண்பா.

அருளாளர் மெய்சார்ந்த வப்பா கருணை
தருவாய் புடைமருதூர்ச் சாமீ—பெருவாழ்வும்
வேண்டகிலே னின்பதமே வேண்டினே னல்காவழ்
பூண்டவனே யான்றளரும் போது. (ரு)

கட்டளைக்கலித்துறை.

போதா துனைத்தினம் பூசிக்கி லேனன்பு பூண்டுமன
மீதார நின்பத மேத்துகி லேன்வினை விட்டொழியக்
காதார நின்புகழ் கேட்கில னின்றெனைக் காப்பவர்யார்
நாதா மருத வனத்தர சேமுத்தி நல்குவையே. (சு)

ஆசிரியப்பா.

நளினமா மலர்மிசை வளையினஞ் சூலுளைந்
தீன்றவெண் மணியினைத் தோன்றிய கருவெனக்
குருகினம் நினைந்தத னருகடை கிடக்கு
மருமலர் வாவியுங் கருமுகி லினந்தவழ்
பூம்பொழி லுந்ததைந் தோம்புபொன் மதிலுமுடைஇ
விடாப்பல வளமிகு புடார்ச்சுன புரத்துக்
கோயில்கொண் டருளுந் தாயினு மினிய
சங்கர கோமதி பங்க தயரபர
பத்திமை சிறிதுமில் சித்தம துடையேன்
மயற்பிணி வெதுப்பத் துயர்ப்படு கடையே
னெந்தநா ளுய்யுநா ளியம்புதி யெந்தா
யுன்றிரு வடியிணை யென்றலை சூட்டி
வெய்ய வினைநீத் துய்யுமா றருளே. (எ)

வெண்பா.

அருளேது மில்லா தகம்பிரம மென்னு
மருளே பிடித்துழன்று மாய்வார்க்—கருதாதுன்
சித்தாந்த சைவரொடு சேர்த்துப் புடைமருதூ
ரத்தா வடியேனை யாள். (அ)

கட்டளைக்கலித்துறை.

ஆளாக்கி மும்மல மாதிய போக்கி யருள்கொடென்று
மீளாப் பரமுத்தி நல்குவ னுண்மையெவங் கூற்றுவிழத்
தாளா லுதைத்த புடைமரு தூர்வளர் சங்கரனைத்
*தோளா மணியைத் தினந்தினம் போற்றித் துதிக்கினெஞ்சே.

ஆசிரியப்பா.

நெட்டிதழ்க் கமல நிலவுநான் முகற்குந்
தேங்கமழ் துளபந் தாங்குமா லினற்கு
மாக்கவு முயிரெலாங் காக்கவு மருளிப்
போக்கு செயறனக் காக்கிய பெரும
நித்தியா னந்த நின்மல வன்பர்செய்
பத்தியா னந்தனக் கமைவுறு பொருளே
மருத வனத்தொளி வயங்குசெம் மணியே
நன்றுதீ தறியாப் புன்புல னுறும்யான்
சிற்றறி வினையே யுற்றபே ரறிவெனக்
கொண்டு தனைமதித் தண்டர்ப் பழித்து
மெய்ந்நெறி விடுத்துப் பொய்ந்நெறி யடுத்துப்
பவமதை யீட்டித் தவமதை யோட்டித்
திரிதருங் கடையேற் குரியநின் னடியார்
குழுவினைக் காட்டித் தொழுதகு சிற்றடி
வந்தனம் புரியுநற் சிந்தனை யளித்துத்
தீப்பவம் போக்கிக் காப்பதுன் கடனே. (௧௦)

வெண்பா.

கடலினஞ் சார்கண்ட கமழ்மருதூ ரைய
வுடலைவிட் டாவி யொருவிப்—படருமுனுன்
சேவின்மணி யோசை செவியுறிலென் சிந்தைகலங்
காவின்மணி யுய்யவெனைக் கா. (௧௧)

கட்டளைக்கலித்துறை.

காலனை மார்க்கண்டற் காகவந் நாளிற் கனன்றுதைத்துக்
காலனை மாரினி யென்பணி வானைக் கமழுந்தென்றற்
காலனை மாறு செயுமரு தூரனைக் கைதொழுதக்
காலனை மாருத ரத்தி னுருவணங் காப்பனெஞ்சே. (௧௨)

* தோளா - துளையாத.

ஆசிரியப்பா.

கெட்டுடற் பஃறலை யுட்டுளைக் கட்செவி
முடிமிசைக் கிடந்த தொடுகடன் ஞாலத்
தின்னுயிர்க் குயிராய் மன்னிநின் றொளிரும்
பராபர சிவசங் கராதிகம் பாகூர்ப்
௫. பொருந வனத்த மருத வனத்த
சொற்றநான் மறைமுடி யுற்ற பதாம்புய
வறுமைப் பிணியினைத் தெறுமரு மருந்தே
விற்பனர் மிசைதரு கற்பகக் கனியே
வஞ்சக னெனினும்யான் றுஞ்சிடும் பொழுதும்
௧0. நின்பத மறவா வன்புகொ ளென்னகத்
திருந்தென் றுயரொலா மிரவிமுன் னிமமெனப்
போமிதஞ் செய்தெனக் காமிதம் புரியே. (௧௩)

வெண்பா.

புரமூன்றும் வேவமுன்பு புன்னகைசெய் தானுங்
*கரமூன்று கண்டத் தவனு—முரா†மூசப்
பாம்பணிகொள் வானும் பகர்மருதப் ‡பாதவத்தி
னும்பணிமெய் சாய்தேவ னும். (௧௪)

கட்டளைக்கலித்துறை.

சீலங்க வேதப் பொருளாத் தினமுனை நாடலின்றிக்
காலங் கழித்துத் திரிபவர்க் கோமுத்தி கைவருங்க
பாலங் கரம்புனை தேவா மருதப் பதிக்கரசே
யேலங் கமழ்குழற் கோமதித் தாய்பங் கிருப்பவனே. (௧௫)

ஆசிரியப்பா.

இரசதப் பொருப்பினும் பரசுமெய் யடியா
ரிதயக மலத்துந் ததைசினைப் *பூதவத்
தருகினுந் திகழ்தரு பெருமநின் மேனி
வருந்தமுன் கல்லினும் பொருந்†தடி யதனினு

---

கரம் - விடம். † மூச - மொய்க்க. ‡ பாதவம் - மரம். * பூதவம் - மருதமரம். † தடி - வில்.

றெறிந்தவர் தம்பிழை மறந்தருள் புரிந்தனை
மாதவ னருச்சனைப் போதினை யுவந்தனை
யவன்றரு மதலைதூ மலர்திரு மேனிக்
கிடரெது புரிந்தமெதன் றெறித்தனை யவனைக்
குற்றம் புரிந்தவர்க் குற்றருள் செய்தோய்
நன்மைசெய் தவன்றனை யின்மை செய்தோய்
நின்செய லென்னே நிகழ்த்துவ தியானே. (கசு)

வெண்பா.

யாக்கையினை விட்டாவி யேகுவதன் முன்மனமே
பூக்கை கொடுநாளும் பூவிசற்—கூக்கமொடு
பூசனை நீயியற்றிற் புன்கணைச்செய் வெவ்வினையின்
மாசனைத்தும் போக்கியருள் வான். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

வானத் தவிரு மதிசூடும் வேணி வரதயிரு
வானத் தவிருந் தடமூர் மருத வனத்த*மையூர்
வானத் தவிரு வினையான் வருமின்னன் மாற்றியங்குய்
வானத் தவிரும் பதங்கனல் காய்முத்தி வாய்ப்பதற்கே. (கஅ)

ஆசிரியப்பா.

†வாமனங் கண்படு பூமலி தடமும்
வனையினம் பயிலுறும் விளையுளும் வரிச்சிறை
கணங்கொள்வண் டிமிரு மணங்கொள் பூம்பொழிலுஞ்
சுற்றுபு பல்வள முற்றசீ காழி
மாநகர் வருந்திரு ஞானசம் பந்தப்
பிள்ளை யருந்தமுன் வள்ளத் தளித்த
தீம்பய மதிலொரு திவலை யாயினுந்
தாதவிழ் கடுக்கைப் போதலர் தொடையன்
மிலைச்சிய வேணியிற் கலைச்சசி யுடையாய்
வெண்ணீ றணிதிரு மேனியாய் பொன்மதிற்
புடைமருதூர்வளர் புண்ணிய மூர்த்தி

* மை - ஆடு. † வாம் - தாவும்.

நாயினேற் கருளவென் றுய்திரு வுளங்கொளத்
திருவரு ணீசெயிற் சிற்றுயி ருறுந்துயர்ப்
பவப்பிணி யகன்றுயர் தவத்தின்மே விடுமே. (கக)

### வெண்பா.

மேனை தவப்புதல்வி மேவுதிரு மேனியா
யானையிவர்ந் தூர்மருதூ ரையகேள்—மானைத்
*தாமுற் றிலகுவிழித் தையலர்மா னீக்கிப்
பரமுத்தி சேரப் பணி. (உ0)

### கட்டளைக்கலித்துறை.

பணிப்பா யலிற்றுயில் கொள்ளும் பிரானும் பதுமமல
ரணிப்பார்.முதல படைப்பானும் வெள்ளயி ராவதனுந்
தணிப்பாய் கவலையென் றேத்தும் பெரும தமியனுய்ய
வெணிப்பா லனஞ்செய் புடைமரு தூருக் கிறையவனே. (உக)

### ஆசிரியப்பா.

இருவிசும் பமரர்யா வருங்கடன் †மதிப்ப
வங்தெழு கொடுவிடங் கந்தர நிறுவி
யுலகுயி ருய்ந்திட விலகருள் புரிந்து
மகரபூ சத்தில் வளந்தரு பொருநைத்
துறையினீர் படிந்து தூயநீ றணிந்து
தனைத்தொழு மவர்க்குத் தண்ணருள் புரிய
மருத வனத்துறு மாமறைக் கொழுந்தே
கோமதித் தாய்க்கொரு கூறருள் குழக
வுனைமுனம் பூசனை யுளுற்றிலன் போலு
மாற்றொடு தும்பை யணிசடைச் சங்கரர்ப்
போற்றிலர்க் கறிகுறி தோற்றுமென் ‡றொருவர்
சாற்றிய வாறெனச் சஞ்சல மிகக்கொள
வறுமைத் துயரெனை வருத்துதல் போதுநீ
யிப்பவத் தேனு மி[illegible]விடா துனையருச்
சித்திட வடியேற் குத்திற மருளி

* தாம் - ஒப்பு. † மதிப்ப - கடைய. ‡ ஒருவர் - மருதூரந்தாதிபாடிய தலைமலைகண்டதேவர்.

வருத்துமத் துன்பினை மாற்றியுன் றிருவடி
கருத்துற வருளுதி கதிபெற யானே. (உஉ)

வெண்பா.

யானென தென்னு மகந்தை யெனக்கொழித்து
மோனமெய்ஞ் ஞான மொழிகுதற்—கான
குருவடிவாய் வந்தாண்டு கொள்வாய் மருதத்
தருவடிமெய் சாய்ந்தவர தா. (உங)

கட்டளைக்கலித்துறை.

தாதார விந்தப் பணிசடை யாரைச் சதுர்மறைசார்
பாதார விந்தப் பரமரைப் பூதவப் பக்கநின்ற
மீதார விந்தப் பயோதரி பாகரை வேண்டெனெஞ்சே
கோதார விந்தப் பவநோய் தெறுங்கதி கூடிடுமே. (உச)

ஆசிரியப்பா.

கூந்தலம் பிடிநடை யேந்திழை மாதர்தம்
மதிவத னத்தினு நுதிகொள்வேல் விழியினு
நந்தன களத்தினுஞ் செந்தன வளத்தினு
மான்றசிந் தையனு யின்றவர் மொழிகொளா
ரு. தாளா மாடென வாளா வுழிதரு
நாயினேற் குனது தூயமெய் யடியார்
குழூஉவினைத் தெரித்து வழூஉவினை யரித்து
மாதவர் தொழும்புடை மருதில்வாழ் மணியே
தாழ்விழ் கடிமலர்த் தாதகிச் சடையாய்
கல. கோமதி பாலொளிர் குரூஉமணிச் சுடரே
தாமதி யாதரு டருவதுன் கடனே. (உரு)

வெண்பா.

*கற்றூனை பூண்டுங் கனலேந்தி னுப்பணின்று
முற்றுத் தவமுயல முன்னுகின்றீர்—செற்றார்
புரமெரித்தார் வாழும் புடைமருதா ரண்பின்
பரமுத்தி மேவவளிப் பார். (உசு)

---

* கற்றூனை • தாவிலேவட்டி.

### கட்டளைக்கலித்துறை.

பாறுயில் வாழ்வெனத் தேரா தலமரும் பாழ்மனமே
கூறுவ லொன்று புடைமரு தீசன் குரைகழற்கே
மீறுமன் பாற்றினம் பூசனை நீசெய் வினையகன்று
மாறும் பவமு மவனரு ளான்முத்தி வாய்த்திடுமே. (உ௭)

### ஆசிரியப்பா.

வார்திரைச் சலதியேழ் மாந்திய குறுமுனிக்
கைந்திலக் கணமொடு செந்தமிழ் தெருட்டிபு
தெனாது திசையே சிறப்புடைத் தென்ன
மலய வரைதனி னிலைபெற வுய்த்துத்
தடமதி லுடுத்த புடைமரு தூரமர்
நாறும்பூ நாத நவிற்றுவல் கேண்மதி
பாலுக் கொருமுனி பாலன் பசித்தழப்
பாற்கட லளித்தனை பரமநின் பால்வள
ருலகெலா முயிர்த்த விலகெழி லுதரத்
தேவி புகலியின் வாவித் தடங்கரை
நின்றழு சேய்க்குப் பொன்றரு வள்ளத்
தின்னமு தருத்தின னிவ்விரு மகாரின்
முனிமகன் பயோததி முழுது மருந்திபு
மொருசெய லேனு முஞற்றிலன் கவுணியர்
குலமணி யொருசிறி திலகுபா லுண்டிவ்
வுலகெலாஞ் செவிமடுத் துள்ளநெக் குருகி
விழிகணீர் மல்க மெய்ம்மயிர் பொடிப்ப
வன்புகொ டோதித் துன்பொரீஇ யுய்தர
வமிழ்தினு மினிதாத் தமிழ்மறை பகர்ந்தனன்—அதான்று
என்பினிற் பூவை யன்பொடு வரவு
மோடுநீர் வையையி லேடெதிர் செலவு
முப்புர மெரியுநாண் மூவருய்ந் தாலென
வெரியிடவ் வேடு கரிதரா தொளிரவு
மொருப்படு மன்பொடு திருப்பெரு மணத்திற்

நன்மணங் காணிய சாருமெய் யடியரு
மறைபயில் பனவரு நிறைதவ யோகரு
மங்கல மாதரு மற்றும்யா வருமே
வளரருட் சோதியுண் மருவவும் புரிந்து
செயற்கருஞ் செய்கை செய்வார் பெரிய
ரெனுந்திரு வாக்கை மனும்படி யியற்றினன்—அதனால்
நின்செய லரிதெனை நிகழ்த்துகோ நின்மனை
தன்செய லரிதென்ச் சாற்றுகோ வண்ணரிலை
னின்ன தரிதென வியம்புக நீயே. (௨௮)

## வெண்பா.

நீயே யுலகமெலா நின்றருளுந் தெய்வமென்
வாயேய் மறைக ளறைகின்ற—நாயேன்
படுதுயர மாற்றியருள் பாவி மருதூர்க்
கடுவிழியோர் பாலமர்யோ கா. (௨௯)

## கட்டளைக்கலித்துறை.

காவா வெனத்தினம் போற்றிடு மென்றன் கவலைமுற்று
மோவா திருந்ததிங் கென்செய்கு வேனென் னுயிர்க்கொர்தலை
வாவாவி சூழ்மரு தூரர சேமக வான்பணியுந்
தேவா விரங்கி யருள்வா யெனக்குன் றிருவடியே. (௩௰)

திருப்புடைமருதூர் மும்மணிக்கோவை.

முற்றிற்று.